உ
சிவமயம்

கங்கைகொண்டான்

# ஸ்ரீ ஆனந்தவல்லி பிள்ளைத்தமிழ்



கைலாச நாதஸ்ய மனோனு கூலாம்
கராப்ஜ வரதாபயமுத்ர விலாஸினீம் சுபாம்
கல்யாண சித்ரா நதி தீரவாஸி நீம்
ஸ்ரீ ஆனந்தவல்லீம் அனிசம் நமாமி.

உ

## குருவருளே திருவருள்



ஸ்ரீ ஆதிசங்கரர்



ச்ருங்கேரி ஸ்ரீஸ்ரீஸ்ரீமஹாசன்னிதானம் - ஸ்ரீஸ்ரீஸ்ரீ சன்னிதானம்

குருவை சரணடைகிறேன் - ஆசிரியர்




श्री श्री जगद्गुरु शङ्कराचार्य महासंस्थानम्, दक्षिणाम्नाय, श्री शारदापीठम्, शृङ्गेरी

**Sri Sri Jagadguru Shankaracharya Mahasamstanam**
**Dakshinamnaya, Sri Sharada Peetam, Sringeri.**

V.R. GOWRI SHANKAR, BE, DIC, MBA.
CEO & Administrator
Sri Sringeri Math and its Properties, Sringeri - 577 139 (Karnataka - India)


Ref Camp : Date :

Ref/S-18/796
May 4, 2017

Sri G Ramachandran
M-68, TNHB Housing Unit
Singanallur
Coimbatore 641005
Tamil Nadu

Dear Sir,

தங்கள் கடிதமும், தாங்கள் வெளியிடவிருக்கும் "கங்கை கொண்டான் ஸ்ரீஆனந்தவல்லி பிள்ளைத்தமிழ்" என்ற புத்தகத்தின் நகல் ஒன்றும் கிடைத்து, ஸ்ரீ ஸ்ரீ ஜகத்குரு சங்கராச்சார்ய மஹாஸ்வாமிகளின் பொற்பாதகமலங்களில் தங்கள் நமஸ்காரங்களுடன் ஸமர்ப்பிக்கப்பட்டன.

ஸ்ரீ சாரதையின் கிருபையால், "கங்கை கொண்டான் ஸ்ரீஆனந்தவல்லி பிள்ளைத்தமிழ்" என்ற இப்புத்தகத்தை பக்தர்கள் அனைவரும் படித்து, ஸ்ரீஆனந்தவல்லி கைலாசநாதர் திருவருளுக்கு பாத்திரராக வேண்டுமென ஸ்ரீ ஆச்சார்யாள் ஆசீர்வத்தருளிய மந்திராக்ஷதையும், ஸ்ரீ சாரதா சந்திரமௌளீஸ்வரர் ப்ரஸாதமும் இத்துடன் அனுப்புகின்றோம்.

இப்படிக்கு,

V R Gowrishankar

(V.R. GOWRISHANKAR)

Encl: Prasadams.

# வாழ்த்துரை:-

மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில் நல்லகதிக்கு யாதுமோர் குறைவிலைக்
கண்ணில் நல்ல.ஃ.துறும் கழுமல வளநகர்ப்
பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே.

- திருஞானசம்பந்தர்

வாழ்வியலில், பிள்ளைப்பருவம் மிகவும் இனிமையானது. இனிமையான பருவத்தினை விளையாட்டுடன் கலந்தநெறிகளை,அழகினை, ஆனந்தத்தினை பிள்ளைத்தமிழாக இயற்றிபாடுவது சிறப்புடையது ஆகும். திரு.கோ.இராமசந்திரன் ஆசிரியபெருமகனாருக்கும்,இதனை நூலாக வெளியிட்ட திரு.கைலாசம் மற்றும் திரு.சரவணன் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நல்வாழ்த்துக்கள்.

அன்புடன்,

ச.லட்சுமணன்,

இணை ஆணையர்.

# வாழ்த்துரை:-

மின் ஆயிரம் ஒரு மெய்வடிவாகி விளங்குகின்ற(து)
அன்னாள் அகமகிழ் ஆனந்தவல்லி அருமறைக்கு
முன்னாய் நடுவெங்குமாய் முடிவாய முதல்விதன்னை
உன்னாது ஒழியினும் உன்னினும்வேண்டுவ தொன்றில்லையே.

- அபிராமி அந்தாதி

ஸ்ரீஆனந்தவல்லிஅம்பாள் கங்கைகொண்டான் கிராமத்தில் அவதரித்ததாக பொதுமக்களால் கருதப்படும் மகிமை உடைய தாயார் ஆவார். அத்தாயாரின் மீது பிள்ளைத்தமிழ்பாடல் இயற்றபெற்றிருப்பது மகிழ்ச்சிக்குரியது. பாடலாசிரியர் திரு.கோ.இராமசந்திரன் அவர்களுக்கு எமது மனமார்ந்த நல்வாழ்த்துக்கள்.

அன்புடன்,

[illegible]

செயல் அலுவலர்
அருள்மிகு கைலாசநாதர்
திருக்கோயில் கங்கைகொண்டான்
திருநெல்வேலி.

**Swami Vivekananda Spiritual Centre**

Gangaikondan - 627 352. Tirunelveli District
Tamil Nadu - India. Ph : 0462-2486168




சிவமயம் திருவருளோ திருவருள் - Date............

வாழ்த்துரை

கங்கை கொண்டான் ஸ்ரீ ஆனந்த வல்லி அம்பாள் நமது கிராமத்தில் அவதரித்தவர். ஆண்டுதோறும் நடைபெறும் ஐப்பசி உத்திர திருக் கல்யாண உற்சவத்தில் காலையில் தபசுக்கு செல்லுமுன்னர் அம்பாள் தன் பிறந்த வீட்டிற்குச் சென்று அங்கு நடைபெறும் பூஜைகளை ஏற்று பின்பு தபசுக்கு சென்றும் வருதலும் இன்றளவும் கடைபிடிக்கப் படுகிறது. (ஆதாரம் 1977ம் ஆண்டு சங்கர நாராயண சுவாமி திருக்கோவிலுடன் இணைந்து இருந்தபோது வெளியிடப்பட்ட திருக் கோவில் வெளியீடு). இத்தகைய பெருமை யுடைய அம்பாளின் மீது பாடல்களைத் தமிழ் இயற்றப்பட்டது என்பது பாராட்டிற் குரியது. பாடல் இயற்றியவர் மற்றும் இதனை பாடல் வெளியிடுவோரையும் எல்லா நலன்களும் பெற்று வாழ பிரார்த்திக்கி றேன்.

[signature] T. [signature]
V. A. O. Retd
S.V.S.P. — PRESIDANT
Gangaikondan

# வாழ்த்துரை

## கங்கைகொண்டான்
## ஸ்ரீ ஆனந்தவல்லி பிள்ளைத்தமிழ்

அம்பாளை குழந்தையாகப் பாவித்து அவள்தம் பிள்ளை விளையாட்டுக்களை கூறும் இப்பிள்ளைத்தமிழ் பாடல்களை நூலாக அமைத்துக் கொடுக்கும் பணியினை அன்னை தன் கருணையினால் எமக்கு வழங்கியுள்ளாள். பாடலாசிரியர் இப்பிள்ளைத்தமிழ்ப் பாடல்களை பக்தியுடனும், அன்புடனும் எழுதியுள்ளார். அவர் விருப்பப்படி மீதமுள்ள பாடல்களையும் இயற்றும் வல்லமையை அன்னை அவருக்கு நல்கட்டும். அவர் பணி சிறக்க வாழ்த்துகிறோம்.

தாயாரின் காருண்யத்தால் அனைவரும்,
நலமுடன் வாழ அன்னையை சரணடைவோம்.

இங்ஙனம்

**K.C. கைலாசம்**



உ

சிவமயம்

ஐயா

திரு. **மா. பட்டமுத்து**

சங்கரன்கோவில்.

# வாழ்த்துரை

## அம்மையப்பருக்கு ஓர் அருள்மாலை

இன்று கங்கைகொண்டான் புனிதத் தலத்திலே ஒரு புண்ணிய விழா. அன்னை ஸ்ரீ ஆனந்தவல்லி அம்பாள் சமேத ஸ்ரீ கயிலாய நாதர் ஆலயம் மஹா கும்பாபிஷேக நல்விழா, "கோலக் கோபுரக் கோகரணஞ் சூழாக் கால்களால் பயன்என்" என்றருளும் அப்பர் சுவாமிகளின் பொன் மொழிக்கேற்ப அற்புதக் கோபுரம் கம்பீரமாகக் காட்சி அளிக்கும் அருள்விழா.

இந்த இனிய விழாவில் மண்ணின் மைந்தர் திரு. கோ. இராமச்-சந்திரன் அவர்கள் அம்மையபபருக்கு ஒரு வாடா மாலை சாத்தி மகிழ்கிறார். **"கங்கைகொண்டான் ஸ்ரீ ஆனந்தவல்லி பிள்ளைத்தமிழ்"** என்னும் மாலையை எளிமையாக, அடக்கமாக அணிவிக்கிறார். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை ஐயா அவர்களைப் போன்ற பிள்ளைத் தமிழா--சிரியர்கள் ஆகிய "அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்" என்று அன்னை ஆனந்தவல்லியிடம் வேண்டுகிறார். கூழாங்கல்லை வைர மணிக்-கல்லாக மாற்றுவதற்கு அந்த அன்னை அருள்புரிய மாட்டாளா? இந்த பிறவியிலேயே 103 அற்புதப் பாடல்களை நூலை முழுமையாக்க அந்த அன்னை நூலாசிரியருக்கு 103 வயது ஆயுள் தர மாட்டாளா? அருள் பாலிப்பாள். இது திண்ணம்.

கங்கை கொண்டான் ஆலய பூஜகர் சிவஸ்ரீ மீனாட்சி சுந்தரபட்டர். அவரது மாமனார் செப்பறை சிவஸ்ரீ கோபாலகிருஷ்ண பட்டர், இருவரும் அடியேனிடம் மிக்க அன்பு கொண்டவர்கள். அவர்களைப் போலவே சிவஸ்ரீ ராஜாமணி (சரவணன்) சிவபக்திச் செழுமையுடையவர். அன்னை ஆனந்தவல்லி அம்பாள் மீது பிள்ளைத்தமிழ் பாமாலை வேண்டும் என்ற பேரார்வம் கொண்டு அன்னை அருளால் நிறைவேற்றிக் கொண்டார். அவருக்கும், நூலாசிரியர் அவர்கட்கும் உளமார்ந்த நன்றி.

சங்கரன்கோவில்.
1-6-2017

அன்பன்

**மா. பட்டமுத்து**



உ

சிவமயம்

# அணிந்துரை

சிவ. சிவகாந்தி,
திருநெல்வேலி.

"கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டா" என்பது முதுமொழி. இந்த குறையைத் தீர்க்க மன்னர்கள் தியாகம் செய்து பல திருக்கோயில்களை பல தலங்களில் கட்டி நாம் பயனடையும்படி உதவி செய்துள்ளார்கள். அத்திருக்கோயில்களில் பல இன்று பயன்பாடு இல்லாமல் இருப்பது நம் தவக்குறைவே. அம்மன்னர்கள், திருக்கோயில்களைக் கட்டிக் கொடுத்தால் பின் வருபவர்கள் திருப்பணி செய்து காப்பாற்றுவார்கள் என நம்பி தான் ஆலயங்களைக் கட்டினார்கள். அந்த நம்பிக்கை வீண் போகாமல் பல நூறு ஆண்டுகட்குப் பின் இப்போது திருப்பணி செய்யப்பட்டு கும்பாபிஷேகம் 1.6.2017ல் நடைபெறும், மேன்மை பொருந்திய சிவாலயம் தான் கங்கை கொண்டானில் உள்ள ஸ்ரீ கைலாசநாதர் கோயில்.

பூமிக்கு ஆகாய கங்கையின் வருகை பகீரதன் செய்த தவத்தால் நிறைவேறியது. அந்த கங்கையை தன் சடா மகுடத்தில் தாங்கி சிவனார் பூமியில் கங்கையயின் வேகங் கெடுத்து மெல்ல விட்டருளினார். சடா மகுடத்தில் கங்கையைத் தாங்கி கொண்டதால் 'கங்கைகொண்டான்' என சிவனுக்கே காரணப் பெயர் ஆயிற்று. அப்பெருமானின் திருப்பெயர் கொண்ட இத்தலத்திற்கு "ஸ்ரீ வல்லப சதுர்வேதி மங்கலம்' என்றும், கங்கை கொண்ட சோழ சதுர்வேதி மங்கலம்" என்றும் பழைய பெயர் உண்டு. சுவாமியின் திருப்பெயர் ஸ்ரீ கைலாசநாதர் ; இப்பெருமான் திருமேனியில் கபாலத்தில் வெட்டுப்பட்டிருப்பதால் கபாலீசர் என்றும் ; திருக்கோயிலினுள் புளிய மரத்திலிருந்து கருவறை வரை சுவாமி நடந்து வந்ததால் நடலிங்கம் என்றும் அழைக்கப்படுகிறார்.

அம்பாள் ஸ்ரீஆனந்தவல்லி. அம்பாள் நின்ற கோலத்தில் 4 திருக்கரங்களோடு காட்சி தருகிறாள். (தாமரை மலர், கருங்குவளை மலர், வரதகரம், அபயகரம்) சுவாமி அம்பாள் பெயர் சுமார் 1200 வருட காலமாக வழங்கப்பட்டு வருகிறது. இத்திருக்கோயில் 8ம் நூற்றாண்டில் கட்டப்பட்டதாகத் தெரிகிறது. தீர்த்தம் – சித்ரா நதி. (தேனு தீர்த்தக் கட்டம்) மற்றும் அக்னி தீர்த்தம்.

மூர்த்தி – சுயம்பு. தலமரம் புளியமரம். 1873ம் வருடத்திற்குப் பின் இப்போது தான் கும்பாபிசேகம் நடைபெறுவதாகத் தெரிகிறது. இப்பிள்ளைத் தமிழை வேண்டிப் பெற்ற திரு. சிவஸ்ரீ (சரவணன்) ராஜாமணி மற்றும் அவரது

தந்தையார் சிவஸ்ரீ மீனாட்சி சுந்தரம் ஆகியோர் மூலம் இந்நூலை ஏற்று, அன்னை ஆனந்தவல்லி தம் கருணையை அவர்களுக்கு வழங்கியுள்ளாள்.

கன்றினைப் பிரிந்த தாய்ப்பசு கன்றினைக் கண்டதும் அடையும் மகிழ்ச்சியைப் போல் மலர்ந்த முகமுள்ள அம்மைக்கு பிள்ளைத்தமிழ் இல்லை என்ற குறை பல ஆண்டுகள் இருந்தது. (சிவனுக்கு பிள்ளைத்தமிழ் பாடக் கூடாது) ஸ்ரீ ஆனந்தவல்லி அம்மை மீது பிள்ளைத்தமிழ் இல்லா குறையை தீர்க்க திரு. கோ. இராமசந்திரன் அவர்கள் மனதை அர்ச்சகர் மூலம் அம்பாள் தூண்டி விட்டாள். காரணம் அன்னார் தற்போது கோயம்புத்தூர் (சிங்காநல்லூரில்) குடியிருந்து வந்தாலும் அன்னார் பூர்வீகத்தில் இத்தலத்தில் வாழ்ந்தவர் தான்.

பத்து பத்துப் பாடலாக பத்து பருவம் வைத்து பிள்ளைத்தமிழ்ப் பாட தயக்கம் கொண்ட அவர்கள் பருவத்திற்கு ஒரு பாட்டு மட்டுமே பாடியுள் ளார்கள். (ஸ்ரீ மாதவ சிவஞான சுவாமிகள் விநாயகர் பிள்ளைத்தமிழில் 10 பருவத்திற்கு / பருவம் ஒன்றுக்கு ஐந்து பாடல்கள் மட்டுமே பாடியுள்ளார்)

ஸ்ரீ ஆனந்தவல்லியின் பால் ஈர்ப்புடைய திரு. கோ. இராமச்சந்திரன் அவர்கள் எளிய நடையில் அம்மையின் புகழ் அனைத்தும் பாடியுள்ளார்.

1வது காப்புப் பருவத்தில் காப்புக் கடவுளரைக் காக்க அழைத்து ஒரே பாடலில் முடிக்கிறார். அப்பாடலில் சிவனை "ஆதி சிவன்" என்ற சொல்லாட்சி நயம் பெற்றது.

2வது செங்கீரைப் பருவத்தில் மகாதேவன் மனமகிழ செங்கீரையாடு என்றும், அம்மை செங்கீரை ஆடும்போது மகிழ்ச்சி பெருக்கால் நந்தி மத்தளம் இசைக்கிறார் என்றும் குறிப்பிடப்பட்ட நயம் பாராட்டுக்குரியது.

3வது தாலப் பருவத்தில் அம்மை நிருதி மூலையில் உள்ள தீயவர்களை உயிர்கள் பொருட்டு போரிட்டு வென்ற வெற்றி பேசப்படுகிறது.

4வது சப்பாணி பருவத்தில் தில்லையில் அம்பலவாணன் நடனமிடும் போது அம்மை களிப்பு எய்தி கைகூட்டி தாளமிட்டது போல் நீ சப்பாணி கொட்டியருளே என்று நயமாக பாடியுள்ளார்.

5வது முத்தப் பருவத்தில் பெருமை பொருந்திய பல தலங்களில் வீற்றி ருக்கும் அம்பாளை இத்தலமும் உன்னுடைய தலம் அன்றோ என்று வினவும் நயம் சுவையுடையது.

6வது வருகைப் பருவத்தில் எல்லோரிடத்தும் கருணை பூண்டு இன்ப முறவரமளிக்க அதுகண்டு கைலாசநாதர் மனம் மகிழ்கிறார் என குறிப்பிடும் நயம் இன்புறத்தக்கது.

7வது அம்புலிப் பருவத்தில் அம்புலியை நோக்கி தட்ச சாபத்தில் நின்று நீக்கியதும் ராகு கேது பற்றாது காத்ததும் நினைவூட்டுவது போல் நினைவூட்டி நம் பாபம் அதுபோல் சரணடைந்தால் தொலையும் என குறிப் பிட்டிருப்பது சுவை நயமுடையது.

8வது அம்மானைப் பருவத்தில் அம்மையின் இசைநலம் கண்டு கந்தர்வர் வியந்ததும் சிவனார் அம்மையை மனத்தடத்து ஓவியமாக வைத்து மகிழ்கிறார் என குறிப்பிட்டுப் பாடுவது போற்றற்குரியது.

9வது நீராடற் பருவத்தில் சித்ராநதி தேனு தீர்த்தத்தில் அம்மையை நீராட அழைக்கும் போது எல்லா புண்ணிய நதிகளும் இங்கு வந்து பயன் தரும் என குறிப்பால் உணர்த்துவது சிறப்புடையதாகும்.

10வது பொன்னூசல் பருவத்தில் அடியார் வேண்டுதலுக்காக அம்மை இத்தலத்தையும், தேவியின் அருட்பீடமாக, ஆனந்த பீடமாக ஆக்கியதை குறிப்பிட்டு இத்தலத்தின் புகழை உச்சமாக வைத்து போற்றும் நடை நயமாக உள்ளது.

இத்தகைய சிறப்புடைய இந்தப் பிள்ளைத்தமிழ் 1192ம் ஆண்டு ஹேமலம்ப வருடம் வைகாசி மாதம் 18ம் தேதி (1–6–2017) வியாழனன்று நடைபெறுகின்ற கும்பாபிசேக நாளன்று வெளிவருவது எல்லோருக்கும் மிகுந்த மன மகிழ்ச்சியை ஏற்படுத்துகிறது.

அடக்க உணர்வுடன் இந்த பிள்ளைத்தமிழ் பாடிய திரு. கோ. இராமச்–சந்திரன் அவர்களைப் பாராட்டி அன்னாருக்கு எல்லா நலமும், வளமும் நல்கிட ஸ்ரீ ஆனந்தவல்லி உடனுறை ஸ்ரீ கைலாசநாதரின் திருவருளை வேண்டிய பிரார்த்திக்கிறேன். இந்நூலைப் படித்து பொருள் தெரிந்து பயனடைய அனைவரையும் வேண்டிக் கொள்கிறேன். இன்னும் இது போல் பல நூல்கள் வெளிவர அம்மையப்பரை பிரார்த்திக்கிறேன்.

அன்புடன்

**சிவ. சிவகாந்தி**

சிவ சிவ

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ ஆனந்தவல்லிஸஹாயம்

நன்றியுரை:-

எல்லாம் வல்ல ஸ்ரீகைலாசநாத சுவாமி சமேத ஸ்ரீஆனந்தவல்லி அம்பாள் தன் பெருங்கருணையினால் இந்நூலினை பாடலாசிரியரை இயற்ற செய்துள்ளாள்.அன்னையை முப்போதும் சரணடைவோம்.

இந்நூலிற்கு தாயின்பரிவோடு குருமுகமாக பெருமதிப்பிற்குரிய ச்ருங்கேரி ஜகத்குரு ஸ்ரீஸ்ரீஸ்ரீமஹாசன்னிதானம் மற்றும் ஸ்ரீஸ்ரீஸ்ரீசன்னிதானம் ஆகிய பெரியோர்கள் தங்கள் காருண்யம் மிக்க ஆசியினை நல்கியுள்ளார்கள். அவர்களை பணிகிறோம்.

இந்நூலினை ஆய்வு மேற்கொண்டு நற்பதிப்பாக வெளியிட உதவிய திரு.சிவகாந்திஅய்யா மற்றும் திரு.பட்டமுத்துஅய்யா ஆகியோருக்கும், இந்நூலிற்கு வாழ்த்துரை வழங்கி இதனை சிறப்புற செய்த மேன்மைதங்கிய உயர்திரு.இணைஆணையர் ஐயா மற்றும் உயர்திரு.நிர்வாகஅதிகாரி அவர்களுக்கும், மற்றுமுள்ள பெருந்தன்மைமிக்க பெரியோர்களுக்கும் எமது நன்றி என்றும் உரித்தாகும்.

இந்நூலினை நாங்கள் வசிக்கும் இல்லத்தின் உரிமையாளர் எம்முடன் ஒருங்கிணைந்து வெளியிடுவதில் மகிழ்ச்சியடைகிறோம்.

எளியேன்,

சரவணன்(ராஜாமணி)

ஸ்ரீ சிருங்கேரி தோரண விநாயகப் பெருமான் துணை
ஸ்ரீ ஆனந்தவல்லி கைலாசநாதர் துணை
ஸ்ரீமகாலக்ஷ்மி ஸ்ரீபூமாதேவி சமேத திருக்குறுங்குடி மலைநம்பி துணை

# கங்கை கொண்டான் ஸ்ரீ ஆனந்தவல்லி பிள்ளைத்தமிழ்

## கூழாங்கல்

"கம்பனொடு கவிதை போயிற்று என்று வருந்தி பாடினான் மகாகவி பாரதி. அந்தக் கவிச்சக்கரவர்த்தி கம்பன் தனது முன்னோரின் பெருமைக்கு முன் தான் எவ்வளவு சிறியவன் என்பதைக் காட்ட அவையடக்கம் பாடுகிறான்.

அறையு மாடரங்கும் படப் பிள்ளைகள்
தறையிற் கீறிடில் தச்சருங் காய்வரோ
இறையு ஞானமிலாத யென் புன்கவி
முறையில் நூல்உணர்ந்தாரு முனிவரோ.

கட்டிடக் கலைவல்லார் ஒருவரின் பிள்ளை தந்தையைப் போலவே வரைபடம் போடும் ஆசையில் குறுக்கு நெடுக்காக இழுக்கும் கோடுகளைக் கண்டு அந்தப் பிள்ளை விளையாட்டை அவர் ரசிக்கிறாரே தவிர கோபிப்பதில்லை என்கிறார் கவிச்சக்கரவர்த்தி.

அடியேனின் கவிதை முயற்சியில் மலிந்து காணப்படும் பிழைகள், சொற்குற்றம், பொருட்குற்றங்களைக் கண்டு தமிழ் வல்லார் சினங்கொண்டு சீறிப்பாய்ந்தால் வியப்பில்லை. அன்னை ஆனந்தவல்லி அவர் முன் தோன்றிச் சினத்தை மாற்றி, விளக்கமளித்து, விரிவுரை வழங்கி அங்கீகாரமும் பெற்று தந்து விடுவாள் என்ற சரணாகதி நம்பிக்கையில் இந்த முயற்சியில் ஈடுபட்டேன். கங்கைகொண்டான் நான் சிறுவயதில் வாழ்ந்து வளர்ந்து ஊர் சித்ரா நதி நீராடல், காலை மாலை ஆலய வழிபாடு, ஆரம்பக்கல்வி– என்று அடியேனின் வாழ்க்கையை ஆரம்பித்து வைத்த புண்ணியபூமி இதுவே. பின்னர் கோவையில் குடியேறிய பின் ஏற்பட்ட மாறுதல்களால், ஆனந்தவல்லி – கைலாசநாதரை அடிக்கடி வந்து தரிசிக்க இயலவில்லை. என்றாலும் மனக்கோயிலில் அவர்களது விக்ரக உருவங்கள் அழுத்தமாகவே பதிந்துள்ளன.

ஆனந்தவல்லி – கைலாசநாதர் தரிசனம் வேண்டி மூன்றாண்டுகளுக்கு முன் கங்கைகொண்டான் வந்தபோது, அம்பாள் சன்னதியில் குமரகுருபரரின் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் – "தொடுக்கும் கடவுட் பழம்பாடல் தொடையின் பயனே" என்ற வருகைப்பருவப் பாடலைப் பாடினேன். கோயிலின் அர்ச்சகர் திரு. மீனாட்சிசுந்தரம் அவர்களின் திருக்குமாரர் இளைஞர் ராஜாமணி அன்னை ஆனந்தவல்லி பெயரில் ஒரு பிள்ளைத்தமிழ் வேண்டும்

என்ற ஆசையை வெளிப்படுத்தினார். ஒரு குருட்டு தைரியத்தில் நானே பாடுகிறேன் என்று சொல்லிவிட்டேன். "அப்படியாயென்று ஆனந்தவல்லி அன்று சிரித்திருப்பாள்"

குடும்பத்தில் நிகழ்ந்த சில மங்கள நிகழ்ச்சிகள், மனைவியின் உடல் நிலை, ஒரு சோகநிகழ்ச்சி, என் வயோதிகம் எனக் கூட்டணி அமைத்து பிள்ளைத்தமிழ் முயற்சியில் நீண்ட தாமதம் ஏற்பட்டு விட்டது.

உடும்புப்பிடி என்று சொல்லுவார்கள். அது இளைஞர் ராஜாமணிக்கு மிகவும் பொருந்தும். காலமெல்லாம் ஆனந்தவல்லி – கைலாசநாதர் திருவடித் தொண்டில் தந்தையுடன் இணைந்து தன்னை அர்ப்பணித்துக் கொண்ட அவருக்கு ஆனந்தவல்லி பிள்ளைத்தமிழ் ஒன்றே தியானமாக இருந்து என்னைக் குடும்பக் கவலைகளிலிருந்து மீட்டு, இந்த நூலைப் பாட என்னை உயிர்ப்பித்துள்து. அவருக்கும், அவரது பெற்றோர், சகோதர, சகோதரி களுக்கும் அன்னை ஆனந்தவல்லி – தந்தை கைலாசநாதப் பெருமான் சகல சௌபாக்கியங்களையும் வழங்கி அருள்பாலிக்கப் பிரார்த்திக்கிறேன்.

தேவியின் சக்தி பீடங்கள் 51 என்று லலிதா சகஸ்ரநாமம் கூறுகிறது. (எ.கா. வாரணாசி. கன்யாகுப்ஜம், நேபாளம், உஜ்ஜையினி) தேவியின் அருட் பேராற்றல் நிறைந்த இடங்கள் அந்தந்த தலத் தேவியாரின் பெயரால் பீடங்களாக உள்ளன. (எ.கா.) காந்தி பீடம், சாரதா பீடம்) அதேபோல் தேவியின் அருட்பேராற்றல் நிறைந்த இடமாகவும், ஆனந்த பீடமாகவும் தேவி பக்தர்களால் கருதப்படும் கங்கைகொண்டான் ஸ்ரீ ஆனந்தவல்லி அம்பாள் சமேத ஸ்ரீ கைலாசநாத சுவாமி திருக்கோயில் திருக்குடமுழுக்கை முன்னின்று நடத்தித்தர இறை பக்தர்கள் சிருங்கேரி பீடாதிபதிகளிடம் வேண்டி விரும்பி கேட்டுக் கொண்டனர்.

ஷண்மத ஸ்தாபகச் சான்றோர் ஆதிசங்கரர் நிர்மாணித்த தக்ஷிணாம்னாய ஸ்ரீ சாரதா பீடத்தின் மகா சன்னிதானம் ஸ்ரீபாரதி தீர்த்த மஹாஸ்வாமிகள், பெருமைக்குரிய சன்னிதானம் விதுசேகர பாரதி ஸ்வாமிகள் இருவரும் அந்த வேண்டுகோளை நிறைவுசெய்து விட்டனர். திருக்குட முழுக்கு நிறைவேறியதால் இந்த ஆனந்தபீடம் இனி இன்னும் பிரகாசமாய் ஒளிவீசும்.

இந்தப் பிள்ளைத்தமிழ், பழுத்ததமிழ் புலமையும், திருவருட் செல்வமும், குறை வரப்பெற்ற குமரகுருபரர், பகழிக்கூத்தர், மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை ஆகியோர் பாடிக்குவித்த வைர மணிக்கற்களுக்கிடையே புகுந்த ஒரு கூழாங்கல்.

அடியேன்

**கோ. இராமச்சந்திரன்**




## பிள்ளைத்தமிழ்

பிள்ளைத்தமிழ் பிள்ளைப் பாட்டு என்றும் வழங்கப்பெறும். இது ஆண் பால் பிள்ளைத்தமிழ், பெண்பால் பிள்ளைத்தமிழ் என்று இரண்டு வகைப்படும்.

ஆண் மகவைக் குறித்த பிள்ளைத் தமிழில் பிள்ளையைத் தெய்வங்கள் காக்க எனத் தொடங்கும் காப்புப் பருவம் முதல் செங்கீரை, தால, சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் எனப் பத்துப் பருவங்கள் பேசப்படும்.

பெண்பால் பிள்ளைத்தமிழில், சிற்றில், சிறுபறை மற்றும் சிறுதேர் பகுதிகளுக்குப் பதிலாக நீராடல், அம்மானை, ஊசல் என்ற தலைப்புக்கள் இடம் பெறுகின்றன. குழந்தை கண்ணனைத் தன் மார்பில் அணைத்தும், மடியிருத்திச் சீராட்டிப் பால் கொடுத்து நீராட்டி அலங்கரித்தும் மகிழ்ந்த யசோதையாகவே மாறிப் பெரியாழ்வார் பாடிய பக்திப் பரவச அனுபவப்–பாசுரங்களே பிற்காலப் பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தமாக விரிந்தது என்று இலக்கிய ஆராய்ச்சியாளர்கள் கூறுவர்.

திவாகரம், பிங்கலம், வெண்பாப் பாட்டியல், பன்னிரு பாட்டியல், சிதம்பரப் பாட்டியல் என்றும் இவற்றுள் சில வேறுபாடுகளுடன் பிள்ளைத்–தமிழ் இலக்கணம் பேசப்படுமென்று. சேக்கிழார் பிள்ளைத்தமிழ் உரையாசிரியர் அடிகளாசிரியர் கூறுகிறார்.

உமாபதி சிவாச்சாரியர் 103 பாடல்களால் சேக்கிழார் புராணம்

பாடியதைப் பின்பற்றி மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் 103 பாடல்களால் சேக்கிழார் பிள்ளைத்தமிழ் பாடினார்.

103 என்ற எண்ணுக்கும் பிள்ளைத்தமிழ் இலக்கியத்துக்கும் ஒரு பந்தம் இருப்பது போல் தெரிகிறது.

| | |
|---|---|
| சேக்கிழார் பிள்ளைத்தமிழ் | 103 பாடல்கள் |
| மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் | 103 பாடல்கள் |
| முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் | 103 பாடல்கள் |

வயிற்று நோய் நீங்க வைணவரான
பகழிக்கூத்தர்ப பாடிய திருச்செந்தூர்
முருகன் பிள்ளைத்தமிழ் 103 பாடல்கள்

மகாவித்துவான் பிள்ளை அவர்கள் அகிலாண்டேஸ்வரி பிள்ளைத்தமிழ் நூலும் இயற்றியுள்ளரென்பதும், டாக்டர் உ.வே.சாமிநாத அய்யர் பிள்ளை யவர்கள் பற்றிய வரலாற்றில் குறிப்பிட்டுள்ளார்.

இவர்கள் எல்லோருமே மேருமலையின் சிகரத்தைத் தொட்டவர்கள். எனக்கு இன்னும் பிறவிகள் உண்டு. அந்தப் பிறவிகளில் ஒன்றில் நான் இவர்கள் கூட்டத்தில் பிறப்பேன். அன்னை ஆனந்தவல்லி என் கையைப் பிடித்து அழைத்துச் சென்று எழுத வைப்பாள்.

இன்று மேரு இருக்குமிடமும் தெரியாது. வழியும் தெரியாது. பருவத்துக்கு ஒன்றெனப் பத்துப்பாடல் எழுதியதே ஒரு பகீரத முயற்சி. மீண்டும் கம்பனை நினைவு கூறுவோம். இந்த எளியேனின் கவிப் பிழைகளை மன்னித்து ஏற்க வேண்டுகிறேன்.

அடியேன்
**கோ. இராமச்சந்திரன்**
கோயம்புத்தூர்.

# கங்கைகொண்டான்
# ஸ்ரீ ஆனந்தவல்லி பிள்ளைத்தமிழ்



## விநாயகக் கடவுள் துதி

உலகெலாந் திருவிழியாற் புரந்தருளு மானந்த
வல்லியுட னாதிசிவனே
உலகென்று வலஞ்செய்து கனிவென்ற முதலோனை
மாதங்க மதிவண்ணனை

அலகிலாச் செல்வமிகு பாரதக் கதையருளும்
ஐங்கரத் தெம்பிரானை
ஆதிமூ லப்ரணவ மொழிச்சிலை முகத்தானைப்
போற்றியஞ் சலித்து நிற்பாம்

நிலவுலகி வெண்டிசையுந் தேமதுரத் தமிழோசைத்
தென்றல்மணம் விரித்துவீசுந்
தென்பாண்டித் திருநாட்டுப் புகழ்கூறு நெல்வேலித்
திலகமென விளங்குதுமுதூர்

பல கலையுஞ் செழித்தோங்கு கங்கைகொண் டானமர்
திரிபுர மகாசுந்தரி
பாண்டியர் குலவிளக்கு ஆனந்த வல்லியை
யாம் பாடத் தமிழ் வேண்டியே.



# குரு வணக்கம்

மன்னுபுகழ் நான்மறையோ டுபநிடத நெறிவாழக்
குருமரபு நனிவிளங்க
மாதவனே முதலாயப் பிரம்மனுடன் வசிட்டமுனி
சத்திபரா சரனளித்த

பன்னரிய தமிழமுதச் சுவைகலந்து வடசொல்லில்
நூல்குவித்த வியாதமுனிவன்
மைந்தன் சுகன் புகழ்பாடுங் கவுடபாத னடிச்சுவட்டில்
கோவிந்த யோகீந்திரர்

மன்னுதலம் கலைக்கவரு பேரூழி நருமதையைச்
செம்படக்கித் தடுத்த மேலோன்
சங்கரனார் மாணாக்கர் நால்வருடன் தமிழ்ஞான
பாலகுரு காழிப்பிள்ளை

தென்னகத்து ஞானமலர் நாவரசர் சுந்தரமுனி
வாதவூர டிகளோடு
பிரபந்தமழைக் கருமுகிலாம் பன்னிருவர் பாதார
விந்தமலர் சென்னிக்கணி.



# 1. காப்புப் பருவம்

குறையொன்று மில்லாத கோவிந்தப் பெருமானை
கோகுலச் செல்வமகனை
கோதைதமிழ் வேதமொழி இசைமணக்குங் கொண்டல்நிறக்
குறுங்குடி யெழில்நம்பியை

நறைபழுத்த இசை நடனக் கலைமுதலோன் பிறைமௌலிப்
பெருமானைப் புரமெரித்த
உமைபங்கன் மண்சுமந்து பிரம்படியே கூலியெனப்
பெற்றோனை ஆதிசிவனை

அறைகூவ லிட்டுவரு ஆணவச் சூர்தடிந்த
அறுமுகன் வடிவேலனை
அயனெனும் நான்முகன் திருமகள் கலைவாணி
அங்கயற் கண்ணியுமையை

இறப்பிலா பேறுடையார் முப்பத்து முக்கோடி
தேவரைப் போற்றி செய்வாம்
எழில்மாடக் கங்கைகொண்டானமர் ஆனந்த
வல்லியைக் காக்கவெனவே.



## 2. செங்கீரைப் பருவம்

தென்பொருநைப் புனலாடித் தேக்குமகிற் புகையூட்டிக்
குழல்வாரிப் பூ முடித்து
பிறைநுதலின் திலகவொளிக் கதிரோடு கரங்கோத்து
நித்திலச் சுட்டியாட

மின்னுகருங் கடைப்புருவத் தோரணத்துப் பந்தற்கீழ்
மீன்விழிகள் நடனமாட
அடியார்கள் போற்றுதுதி இசைநுகரு மிருசெவியில்
தாடங்க நிலவு வீச

மன்னுதவ வரங்கூட மணியாரம் மார்பிலங்க
மேகலைகை வளைகுலுங்க
மலர்ச்சிலம்பு நடையழகில் மாதேவன் மனமகிழ
நந்திமத் தளமிசைக்கத்

தென்குமரித் திருநாட்டுச் சவுந்தரிய நாயகி நீ
செங்கீரை யாடி யருளே
திருத்தலக் கங்கைகொண் டானமர் வல்லி நீ
செங்கீரை யாடியருளே.



## 3. தாலப் பருவம்

எண்ணில் வரம்பல பெற்ற செருக்குடன்
ஈரே ழுலகினிலே
எம்மை யெதிர்ப்போ ரில்லை யெனத்தலை
குலுங்க நகைத்தாடும்

திண்ணிய நிருதர் வெம்படை யன்னையுன்
சினவிழிப் புயல் வீச்சில்
சாய்ந்து சரிந்திடத் தீமைக ளகலச்
செந்திரு வொளிவீச

மண்ணிலும் விண்ணிலும் மாதவர் தேவர்
மாந்தர் துயரகலப்
போர்பல தொடுத்த ஜெயக்கொடி நாயகி
சோர்வுனை வருத்தாது

கண்மணி நீயென் மெலிதோள் சாய்ந்து
தாலோ தாலேலோ
கவியிற் பிழையினைப் பொறுத்தருள் வல்லீ
தாலோ தாலேலோ.



# 4. சப்பாணிப் பருவம்

கலைமன்னு செந்தமிழ்க்கு இயலிசைக் கூத்தென்று
இலக்கண முறைவகுத்துக்
கழகமோ டமர்ந்தன்று மொழியாய்ந்த முதற்கூத்தன்
தில்லைப் பழம்பதியிலே.

தொலையாத புகழ்மேவு சிற்பநெறிக் கலைவல்லான்
மயன்வகுத்த அரங்கமேறி
வழுவிலா இசையினிமை யாழோடு குழல்கூட
நந்திமத் தளமிசைக்கச்

சிலைப்புருவ விழியாட திருச்செவியிற் குழையாடத்
திக்கெட்டுஞ் சடையுமாடச்
சிவனார் திருநடனக் காட்சியிற் களித்தமயில்
கனகமணிக் கரங்கள் கூட்டிச்

சிலையழகுச் சிங்கார ஆனந்த வல்லிநீ
சப்பாணி கொட்டியருளே
சீர்மன்னு தென்பாண்டித் திலகவதி வல்லிநீ
சப்பாணி கொட்டியருளே.



## 5. முத்தப் பருவம்

அன்னை உந்தன் அருளாட்சி
ஐம்பத்தோர் சக்திப் பீடமுடன்
அகத்தியன் தென்றிசை வருங்காலை
அடிபணிந்தவர்க்கு வழிதந்த

மன்னும் புகழ்மிகு விந்தியமும்
மங்கலச் சிந்தா மணிவீடும்
மாதவர் போற்றுஞ் ஜாலந்தரமுடன்
மலர்ப்பூஞ் சோலைக் கதம்பவனம்

மின்னொளி வீசுந் திருக்கயிலாய
மேதகு மலையா சலமென்னும்
மேதகு திருத்தல வரிசையிலே
எளியோர் வாழுஞ் சிற்றூரும்

உன்னது அன்றோ ஆனந்தி
உனதருள் முத்தந் தருகவே
உன்னடி சரணே உலகத்தாயே
உனதருள் முத்தந் தருகவே.



## 6. வருகைப் பருவம்

பிறைமௌலி முக்கணான் இடப்பாகம்
உறைவோய் வருக செல்வமிகு
தென்னாட்டு முத்தே வருகே, கவிவாணர்
சொன்மாலைப் பொருள் பொதிந்த

நிறைவே வருக, நித்தி யானந்தப்
பெருவெளியே வருக அருள் மன்னும்
ஊருணியே வருக, எண்டிசையுங்
காத்தருளுந் திரிபுரையே வருக.

குறையிலா மாதவத்தோர் மங்கலச் சொற்
பொருளே வருக பூதலத்தே
எளியோரு நல்லோருஞ் சிறுமையிலா
வாழ்வுகந்து இன்பமுற வரமளிக்க

மறைமுதல்வன் கயிலாய நாதன்மகிழ்
ஆனந்த வல்லி நீ வருகவே
மாமூதூர் கங்கைகொண்டான் பெற்ற
மாநிதியே வருக வருகவே.



# 7. அம்புலிப் பருவம்

ஏழேழு பிறவியினுஞ் சான்றோர் சொற்கேளாது
யானிழைத்த வினைகளெல்லாம்
பயனளிக்க வந்தநாள் நிலைகலங்கி நின்ற காலை
குரலொன்று பாண்டிமகளே

பாழேது மண்டாது புரந்திடுவாள் திருவடியைப்
பற்றிநீ உய்வாயென்ன
ஓடோடி அன்னையடி சரணமென வினைவடுக்கள்
மறைந்தகதை அறியாயோ நீ

ஊழூழீ ஆண்டாகத் தட்சனிட்ட சாபத்தால்
தேய்ந்துவளர் சோகந்தீர
இரு பாம்பு வாய்பிளந்து விழுங்கவரு விபத்து நீங்கி
விண்வெளி யுலா வந்திட

ஆழியுடன் சங்கேந்து குறுங்குடியான் தங்கையுடன்
அம்புலீ யாடவாவே
ஆனந்தக் கூத்தன் மகிழ் ஆனந்த வல்லியுடன்
அம்புலி யாட வாவே.



## 8. அம்மானைப் பருவம்

பண்சுமந்த தமிழ்மணக்கும் பாடலுடன் வேதவொலி
மங்கலச் சேதிகூற
மலர்க்கூட்ட மீதமர்ந்து வண்டினங்கள் உடனிசைக்கு
கதம்பவனப் பசுஞ்சோலையில்.

கண்சுமந்த இன்பமுடன் அன்னங்கள் நடைபயிலத்
தோழியரும் யாழிசைக்க
தேவியுடன் குரலினிமைக் கொவ்வாது கந்தருவர்
இசைக்கல்வி நாடி நிற்க.

மண்சுமந்த சிவனாரும் உன்னிசையில் செயல் மறக்க
வேகவதி சீறிப்பாயப்
பாண்டியர்கோன் பிரம்படியு முதுகேற்று வந்தியெனும்
மூதாட்டிக் கருள்புரிந்து

புண்சுமந்த மேனியனார் மனத்தடத்து ஓவியமே
அம்மானை யாடியருளே
கயிலாயநாதன் மகிழ் கங்கைகொண் டான்வல்லி
அம்மானை யாடியருளே.



## 9. நீடாடற் பருவம்

அருள்பொங்கு செங்கைவளை சுருதிநூல் இசைபாட
அலையோசை தாளமிடவே
ஆதிசிவன் திருவருளாற் பாரதத்துச் செல்வங்கள்
நாடோறும் செழித்து வோங்க

இருவினையுந் தீர்த்தருளுங் கங்கையோடு கண்ணனாடு
யமுனையவள் சங்கமிக்கப்
பெருகிவரு நருமதை கோ தாவரியுந் தமிழ்மணக்கும்
வைகையும் சித்ரகங்கையுடன் சேர

அரியதவ மாமுனிவர் பத்தினியர் விண்மகளிர்
பலமுனையிற் சுற்றி நிற்க
நாயகியாய் அன்னைநீ நடுநிற்க நீர்ப்பரப்பில்
ஸ்ரீசக்ரம் பிரதிட்டையாகப்

பிரியாது பிள்ளைகளைக் காத்தருள அன்னை நீ
புது வெள்ள நீ ராடியருளே
பெரும்புகழ்க் கங்கை கொண் டானமர் வல்லிநீ
வெள்ள நீ ராடியருளே.



# 10. பொன்னூசல் பருவம்

அன்னைநின் புகழ்மேவு பீடங்கள் ஐம்பத்து
ஒன்றினோடு தென்கோடிவாழ்
அடியார்கள் உனைநாடித் தமிழ்ப்பாண்டித் திருநாட்டில்
நின் பீடம் மிளிரவேண்ட

மன்னுபுகழ் சங்கரனார் அத்துவித நெறிதழைக்க
அன்றமைத்த பீட நான்கில்
தலைப்பீட ச்ருங்கேரி தவசீலர் பாரதி தீர்த்தருடன்
அவர் சீடர் விதுசேகரர்

முன்னைத் தவங்கனிய அடியாரு மனமகிழத்
திருக்குட முழுக்காட்டவே
ஆனந்த பீடத்தில் ஒளிர்ந்த கங்கைகொண் டான்மூதூர்
ஆதிப ராசக்தி நீ

பொன்னுடன் மணியிழைத்த நவரத்னப் பலகையேறிப்
பொன்னூச லாடியருளே
பூரணி புராதனி ஆனந்த வல்லிநீ
பொன்னூச லாடியருளே.

---

அபிராமிபட்டர் அருளிச் செய்த

# அபிராமி அந்தாதி

(சில பாடல்கள்)

பூத்தவளே புவனம் பதினான்கையும் பூத்தவண்ணம்
காத்தவளே பின்கரந்தவளே கறைக்கண்டனுக்கு
மூத்தவளே என்றும் மூவா முகுந்தற்கு இளையவளே
மாத்தவளே உன்னை அன்றி மற்றோர் தெய்வம் வந்திப்பதே.

அதிசயமான வடிவுடையாள் அரவிந்தமெல்லாம்
துதிசய ஆனன சுந்தரவல்லி துணை இரதி
பதிசய மானது அபசயமாக முன் பார்த்தவர்தம்
மதிசயமாக அன்றோ வாம பாகத்தை வவ்வியதே.

மங்கலை செங்கலசம் முலையாள் மலையாள் வருணச்
சங்கலை செங்கைச் சகலகலா மயில்தாவு கங்கை
பொங்கலை தங்கும் புரிசடையோன் புடையாள் உடையாள்
பிங்கலை நீலிசெய்யாள் வெளியாள் பசும்பெண் கொடியே.

கொடியே இளவஞ்சிக் கொம்பே எனக்கு வம்பே பழுத்த
படியே மறையின் பரிமளமே பனிமால் இமயப்
பிடியே பிரமன் முதலாய தேவரைப் பெற்ற அம்மே
அடியேன் இறந்திங்கு இனிப்பிறவாமல் வந்து ஆண்டுகொள்ளே.

பின்னே திரிந்துன் அடியாரைப்பேணிப் பிறப்பறுக்க
முன்னே தவங்கள் முயன்று கொண்டேன் முதல் மூவருக்கும்
அன்னே உலகுக்கு அபிராமி என்னும் அருமருந்தே
என்னே இனியுன்னை யான்மறவாமல் நின்று ஏத்துவனே.

உடைத்தனை வஞ்சப்பிறவியை உள்ளம் உருகும் அன்பு
படைத்தனை பத்ம பதயுகம் சூடும் பணி எனக்கே
அடைத்தனை நெஞ்சத்துஅழுக்கையெல்லாம் நின் அருட்புனலால்
துடைத்தனை சுந்தரி நின்னருள் ஏதென்று சொல்லுவதே.

உமையும் உமையொரு பாகனும் ஏக உருவில் வந்திங்கு
எமையும் தமக்கன்பு செய்யவைத்தார் இனி எண்ணுதற்குச்
சமையங்களும் இல்லை ஈன்றெடுப்பாள் ஒரு தாயும் இல்லை
அமையும் அமையுறு தோளியர் மேல் வைத்த ஆசையுமே.

புண்ணியம் செய்தனமே மனமே புதுப்பூங்குவளைக்
கண்ணியும் செய்ய கணவரும் கூடி நம் காரணத்தால்
நண்ணியிங்கே வந்து தம் அடியார்கள் நடுவிருக்கப்
பண்ணிநம் சென்னியின் மேல் பத்மபாதம் பதித்திடவே.

தொண்டு செய்யாது நின்பாதம் தொழாது துணிந்திச்சையே
பண்டு செய்தார் உளரோ இலரோ அப்பரிசடியேன்
கண்டு செய்தால் அது கை தவமோ அன்றிச் செய்தவமோ
மிண்டு செய்தாலும் பொறுக்கை நன்றேபின் வெறுக்கையன்றே.

நாயகி நான்முகி நாராயணி கை நளினபஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி சாமளை சாதிநச்சு
வாயகி மாலினி வாராகி சூலினி மாதங்கியென்று
ஆய கியாதி உடையாள் சரணம் அரண் நமக்கே.

அருணாம் புயத்தும் என் சித்தாம்புயத்தும் அமர்ந்திருக்கும்
தருணாம் புயமுலைத் தையல் நல்லாள் தகைசேர்நயனக்
கருணாம் புயமும் வதனாம் புயமும் கராம்புயமும்
சரணாம் புயமும் அல்லாற் கண்டிலேன் ஒரு தஞ்சமுமே.

தங்கச் சிலைகொண்டு தானவர் முப்புரம் சாய்த்து மத
வெங்கண் கரியுரி போர்த்த செஞ்சேவகன் மெய் அடையக்
கொங்கைக் குரும்பைக் குறியிட்ட நாயகி கோகனகச்
செங்கைக் கரும்பும் மலரும் எப்போதும் என்சிந்தையதே.

தேறும்படி சில ஏதுவும் காட்டி முன்செல்கதிக்குக்
கூறும் பொருள் குன்றில் கொட்டும் தறிகுறிக்கும் சமயம்
ஆறும் தலைவி இவளாய் இருப்பது அறிந்திருந்தும்
வேறும் சமயமுண்டென்று கொண்டாடிய வீணருக்கே.

ககனமும் வானும் புவனமும் காணவில் காமன் அங்கம்
தகனம் முன்செய்த தவப்பெருமாற்குத் தடக்கையும் செம்
முகனும்முந் நான்குஇரு மூன்றுஎனத் தோன்றிய மூதறிவின்
மகனும் உண்டாயதன்றோ வல்லி நீ செய்த வல்லபமே.

# 51 சக்தி பீடங்களில் தமிழ்நாட்டில் அமைந்துள்ள சக்தி பீடங்கள்

நன்றி : (நூல் : சாக்தம் ; நூலாசிரியர் : திரு. இராமநாத சிவாச்சாரியார், திருக்கோலக்கா)

1. காஞ்சி - காமாக்ஷி - காமகோடி பீடம்
2. மதுரை - மீனாக்ஷி - மந்த்ரிணீ பீடம்
3. திருஆனைக்கா - அகிலாண்டேஸ்வரி - தண்டினீபீடம்
4. இராமேஸ்வரம் - பர்வதவர்த்தினி - ஸேதுபீடம்
5. பாபநாசம் - உலகாம்பிகை - விமலா பீடம்
6. திருவாரூர் - கமலாம்பாள் - கமலா பீடம்
7. கன்னியாகுமரி - குமாரி - குமாரி பீடம்
8. திருவையாறு - தர்மஸம்வர்த்தினி - தர்மபீடம்
9. திருஅண்ணாமலை - அபிதகுசாம்பாள் - அருண பீடம்
10. திருக்கடவூர் - அபிராமி - கால பீடம்
11. திருக்குற்றாலம் - பராசக்தி (மஹாமேரு) - பராசக்தி பீடம்
12. கும்பகோணம் - ஸ்ரீ மங்களாம்பிகை - மந்த்ரசக்தி பீடம்
13. திருநெல்வேலி - காந்திமதி - காந்தி பீடம்
14. ஈங்கோய்மலை - லலிதா - சாயா பீடம்
15. திருவெற்றியூர் - திரிபுரசுந்தரி - இக்ஷு பீடம்

**இப்பீடங்களின் தேவியர்களை சரணடைகிறேன்.**

அபீஷ்டம் ஸித்திமே தேஹி சரணாகத வத்ஸலே
தேவிபாத அசஞ்சலா பக்தி ஸித்யர்த்தம் தேஹிமே பரமேஸ்வரி

சரவணன் (ராஜாமணி)

# ஸ்ரீ கல்யாணசுந்தரர்



மாதர்ப் பிறைக்கண்ணியானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந்து ஏத்திப் புகுவார்அவர்பின் புகுவேன்
யாதும் சுவடு படாமல் ஐயாறு அடைகின்றபோது
காதல் மடப்பிடி யோடும் களிறு வருவன கண்டேன்
கண்டேன் அவர் திருப்பாதம் கண்டுஅறியாதன கண்டேன்.

இலவச வெளியீடு

உமா, திலி-6. 2334900